# நீவிர் யாவர்?

# பொதுமதம்.

## கடவுளுந் தானும்.

"ஆதியில் கடவுளிடம் சொல் உண்டாகி உலகைச் செய்தது. கடவுளிடமிருந்த ஜீவன் மக்களுக்கு ஒளியாகி எல்லோரையும் பிரகாசிக்கச் செய்தது."

"என்னைக் காண்பவன் தந்தையை (கடவுளை)க் காண்கிறான். நான் அவருக்குள் இருக்கிறேன். அவர் எனக்குள் உள்ளார், என்பதை நம்புவீராக."

"தன்னை யறிகிறவன் தலைவனை (கடவுளை) அறிகிறான்" "நானே நீ (கடவுள்) நீயே நான்" "அது (கடவுள்) நீயாக இருக்கிறாய்" "நான் அஃதாக (கடவுளாக) இருக்கிறேன்" "தன்னை யறியும் நெறிக்கணே என்னைக் காணுதற்கு முன் ஒளிகளின் கூட்டம் (பராசக்தி-பிரகிருதி-மனம்) அறியப்பட்டது. அஃது அறிபடு பொருளாதலின் அதனையுங்கடந்து அறிவானாகிய என்னைக் கண்டேன்" என்று ஞானியர் சொல்லியிருக்கின்றனர்.

# தன்னை யறிவது

அறிதல் என்கிற செயல் அறிவான் அறிபடுபொருள் அறிவு என்னும் பொருள்கள் மூன்றால் ஆவதாம். அம் மூன்று ஞாதுரு; ஞேயம்; ஞானம்; காண்பான், காணப் படுபொருள், காட்சி; தெரிவான், தெரிபொருள் தெரி சனம் என்றும் வழங்கப்பெறும்.

அறிவானாகிய தனக்கு வேறான ஒன்றை அல்லது பலவற்றை அறியும்போதுதான் அது மூன்றாக விரிகிறது. உலகம் இப்படி அறியப்படுகிறது. இப்படி அறியப்படு கிற உலகச் சம்பந்தத்தால் துக்கமும் துயரமுமே உண்டா கின்றன. உலகை (உலகப் பொருள்களை) அறியாமலிருக் கும்போது தான் என்னும் அறிவான் அலைவு செயல் ஆகியவை அற்று தனித்திருக்கிறது. அப்போது துன் பம் நீங்கி இன்பமுண்டாகிறது. தான் எல்லையற்றதாக வும், இன்பக்கடலுள் மூழ்கியதாகவும் ஞானியறிகிறான். ஆதலின் தான் அறிவானாகி உலகை யறிவதில் முற்படா மல் தன்னை அறிவதில் முற்படுவது சுகம்பெறும் நிலை யாம். இதை முன்னைமூதறிஞர் ஞாதுரு ஞான ஞேயங்க ளாகிய திரிபுடிகளைவிட்டு ஞாதுருவான் தான் ஞேயமாக அறியப்படவேண்டும் என்பதைத் தமது சின்முத்திரைக் குறியால் குறிப்பிட்டனர்.

“அறிவான் அறிபடுபொருள் அறிவு என்னும் பிரிவு களை அடையாதிருக்கும்போது தான் என்பது எல்லை யற்றுப் பரந்த நிலையாயிருக்கிறது.”

"மனம் நினைவுகளை அடையாமல் அறிவானதை நோக்குங்கால் பெரிய சுகம் உண்டாகிறது."

"அமைவான மனமே தானான அறிவாளுக ஒன்று பட்டுக் காண்கிறது."

"தன்னை யறிவதால் வரும் பேரின்பத்தை யடைந்த பின் வேறு பொருள்களில் வரும் இன்பத்தை அடைய மனம் விரும்புவதில்லை."

"தான் அறியப்படுங்கால் அறிவான் முதலிய திரிபுடிகள் உண்டாவதில்லை." "அறிவை அறிவதுவே ஆகும் பொருள்."

"உடம்பும், பொறிகளும், கருவிகளும், மன முதலி யனவும் நீ அன்று; இவற்றை யறிகிற அறிவுதான் நீயாக இருக்கிறுய்."

"அறிவான தான் என்பது அறியப்பட முற்படும் போதே எல்லா அலைகளும் எண்ணங்களும் அடங்கப் பெற்று மனம் சாந்தியுறும்."

## சக்திகளும் சித்திகளும்.

தன்னை அறிகிற தன் ஞானத்தால் அறியாமையும் அதனுல் வந்த பிறவிகளும் துன்பமும் ஒழிகின்றன. ஞானமாய் அறிவுவடிவமாக வுள்ளதை நினைவிற்கொண்டு தன் உடம்பை வெறும் வெளியாக நினைத்து அவ்வுடம்பின் அளவான இடத்தை வெளிமயமாக நினைவிற் கொண்டுவருகிற பயிற்சியைச் செய்துவந்தால் தன் உடம்பு பிறர்கட்புலனுக்கும் பரிசவுணர்ச்சிக்கும் அகப்

படாமல மறையும. தன்னை யறிதலில் தலைப்பட்டு உடல் ஓரிடமிருந்து வேறிடம்போக நடத்தப்படும்போது காற்றுப்போல் எளிதில் விரைவில் குறித்தவிடம் சேரும்.

## இறந்தவர் எழுவது.

தன்னை யறிதலையுடைய ஞானி தன்னிடமிருந்து சந்திரனொளிபோன்ற ஒளி யெழுந்து பிணியாளர், குருடு, செவிடு, ஊமை முதலிய உடற்குறை குற்றமுடையோர், இறந்த உடலம் இவற்றின்மீது பாய்ந்து ஊடுருவிச் சென்று நிறைவதாக எண்ணினால் பிணி முதலியன நீங்கலும், இறந்தவர் பிழைத்து, எழுவதும் உடற்குறை குற்றங்கள் செம்மைப்படுவதும் உண்டாகும்.

## இளமையும் நீடுவாழ்வதும்.

அறிவறிந்த ஞானி தன்னிடமிருந்து எழுகிற சந்திரனொளிபோன்ற கிரணக்கற்றையைத் தன் வாய்வழியாகத் தன் உடலுக்குள்சென்று நிறைவதாக எண்ணியிருப்பானாயின் நரை, திரை, மூப்பு, பிணி, சாக்காடு ஆயவை நீங்கி இளமையும்நீடித்த ஆயுட்பேறும் உண்டாகப்பெறுவான்.

## தன் ஞானத்தைப் பிறர்க்களிப்பது.

தன்னை யடுத்துள்ளவர்க்கு அல்லது பிறர் எவர்க்காவது தன்னை யறிவதாய தத்துவஞானத்தை யளிக்க ஞானி விரும்பினால் தன் மனத்தால் நினைத்தலாலும், கண்ணால் நோக்குவதாலும், உடலால் தொடுவதாலும் அங்ஙனம் பிறர்க்குத் தன்னையறியும் ஞானநிலையை உண்டாக்கி அவர் பிறப்பை மேன்மைப்படுத்துவன்.

[illegible]

ஞானியைத் தம்மிடம் இருக்கப் பெறுவதாலும், அவரைத் தெரிசித்தாலும், அவர்க்கு ஏதேனும் கொடுத்து உபசரித்தாலும் அப்படிச் செய்தவர்க்குச் சீர்களும், செல்வங்களும், ஆட்சியும் அமைப்புகளும், வளங்களும் மகிழ்வுகளும் பிற எல்லா நலங்களும் தாமே உண்டாகிச் சுகிப்பர். ஞானியிருந்துவந்த இடமும் மேன்மையும் சிறப்பும் பொருந்தியதாகும்.

## ஞானப்பயிற்சியின் கால அளவு

தன்னையறிதலில் பிரியாமல் மறவாதிருக்கும் ஒருவர் ஓராண்டு அங்ஙனம் இடைவிடாத பயிற்சியில் நினைவுள்ளவராயிருப்பின் ஆண்டின் இறுதியில் எல்லாச் சக்திகளும் சித்திகளும் நிறையப்பெறுவார்.

## கடவுளும் படைப்பும்.

தானே தலைவன் (கடவுள்) தலைவனே எல்லாம் ஆவதால் தன்னையறிந்த ஞானி தன் மனமாகிய சக்தியின் வல்லமையால் உலகாதியவற்றை யுண்டாக்குவன். உயிர்கள் நெறியறிந்து தம்மை யுணர்ந்து எல்லாம்வல்ல சக்தியை ஞானத்தாலடைந்து சுகமுறுவதற்காக உலகை யுண்டாக்குவன். தன்னிடமிருந்து மனமும், மனத்திடமிருந்து உலகங்களும் உண்டாகி மாறும்.

## பயிற்சியில் பன்னிருபடித்துறைகள்.

தன்னையறிகிற ஞானி அந்த நிலையில் தினம் இரண்டு மணிநேரம் நிலைபெற்று இப்படி,

ஓராண்டு கழிப்பானாயின் அவனுக்கு உடற்சுகமும், பிணியின்மையும், எல்லாராலும் விரும்பப்படுகின்றமையும் உண்டாகும்.

ஈராண்டு அங்ஙனம் நிலைபெற்றிருப்பின் எல்லாக்கலையறிவுடைமையும் கவித்துவத்திறமையும் உண்டாம்.

மூன்றாண்டாயின் விஷங்கள் துன்புறுத்தாமையும் கொடிய விலங்குகள் துன்புறுத்த நெருங்காமையும் ஆய தகைமைகள் வாய்க்கும்.

நாலாவதாண்டில் பசி, தாக சீதவெப்ப முதலிய துயரங்கள் உறாமலிருக்கும்.

ஐந்தாமாண்டில் தூரசிரவணம், வரமொழிகள் பலிதம், பரகாயப் பிரவேசமிவையுண்டாகும்.

ஆறாவதாண்டில் எவ்வித படை (ஆய்தங்) களாலும் சேதிக்கக்கூடாத சித்தியுண்டாகும்.

ஏழாமாண்டில் பூமியில் பாதம்படியாத வண்ணம் உலவியும், தூரதெரிசனமும் வேகமாய்ச் செல்தலும் ஆய சித்திகள் உண்டாம்.

எட்டாமாண்டில் ஞானிக்கு எல்லாச் சத்திகளும் சித்திசெல்வங்களும் உண்டாகும்.

ஒன்பதாமாண்டில் ஆகாயசஞ்சாரியாய் உடல் வைரம்போன்ற சக்தியுடையவனாவான்.

பத்தா மாண்டில்மனம் விசாலித்து எங்கும் பெருகி எல்லாவிடத்தும் வாயுபோல் செல்வான்.

ஆண்டு பதினொன்றில் எல்லாமறியும் தன்மையுண்டாம்.

பன்னிரியாண்டில் ஞானி ஆக்கியளித்துத் துடைக்கு மவனவான் (இறைவனவான்).

இப்பன்னிரு படித்துறைகளில் பயில்பவர் எவரும் இவ்வறிவையுண்டாக்கிய ஆசிரியர்பால் அன்புடையவராய் அவரைத் தம் வடிவினராகவே எண்ணி வணங்கல் வேண்டும்.

## ஞான சித்திதரும் எட்டுமுறைகள்.

(1) பிறவி (ஞானியர் பிறந்த குலம், பரம்பரையில் தான் பிறக்க நேர்வது).

(2) மந்திரம் (தக்க மந்திர ஜெபத்தால் ஞானமும் சித்திகளும் அடைவது).

(3) மருந்து (கல்பமருந்து மூலிகை தெரிந்து அருந்துவதால் ஞானசித்தியுறுவது).

(4) தவம் (தவஞ்செய்வதாலும்).

(5) தியானம் (தியானித்து வருவதாலும்).

(6) யோகம் (யோகம் அநுஷ்டிப்பதாலும்).

(7) சமாதி (தன்னை யறிந்து அமைவதாலும்).

(8) ஞானியர் வரப்பிரசாதம் (சித்தர்களின் வரத்தாலும்.)

இவற்றுள் ஏதேனும் ஒன்றைச் சாதிப்பதாலேயே ஞானம் அடையப்பெற்று எல்லாம் சித்தியாகி யின்பப் பேறுண்டாகும்.

இதுகாறும் தன்னையறிவதாகிய சமாதி முறை விரித்துரைக்கப்பட்டது. மற்ற முறைகள் மக்களின் வேண்டுகோளறிந்து விரித்துரைக்கப்பெறும்.

# மறை வெளிப்பாடு.

தன்னையறிதலாகிய தத்துவஞானத்தை எல்லாரு மறிந்து சுகம் பெறுதற்காக அதை மறவாதிருத்தற் பொருட்டு இங்கு எளிதானமுறைகளால் மீண்டும் கூறி வற்புறுத்துவதாவது: தங்கள் மனத்தைச் செயலறவிட்டு அமைதியுற்றிருக்குங்கால் தானாகிய அறிவு தனித்து நிற் பதையறியக்கூடும். அங்ஙனம் செயலற்ற மனதுடன் இருப்பதாவது அன்றித் தமது தலையினுள்ளே மேற்பா கத்தே எல்லா மறிவதற்கு ஆயத்தமாக இருப்பதாக இருக்கும் அறிவை அறிந்தபடி இருப்பதாவது செய்யப் பட்டால் தன்னையறிந்த ஞானநிலையில் அமர்ந்ததாகும். தான் என்பது உடல், புலன்பொறிகள், பிராணனாகிய காற்று, மனமுதலியவை அல்ல அறிவாக அறிவதே தான் என்பதை நினைவில் தரித்திருத்தலே ஞானமடைந்த தாகும்.

சாந்தியும் சக்திகளும் நம்மனோர்க்கு உண்டாதாக.

முற்றுப் பெறு.

பகாபகோ ...ரிய, டாக்டர்
வே. சாமிநாதையர் நூல் நிலையம்
அடையாறு, சென்னை-20.

ஸ்ரீ பாரதி பிரஸ், சூளை, சென்னை.